உ
சிவமயம்

# ஞான ரத்நாவளி



காசிவாசி

**செந்திநாத ஐயர் அவர்கள்**

இயற்றியது.

வெளியிடுவோர்:

சிவநெறிப்புரவலர், சிவதர்மவள்ளல்

**க. கனகராசா J. P. அவர்கள்**

(மில்க்வைற் தொழிலதிபர்)

யாழ்ப்பாணம்.

1984

Srikanthaluxumy. A
11/21, Inuvil West
Chunnakam

உ
சிவமயம்

# ஞான ரத்நாவளி

★

காசிவாசி


செந்திநாத ஐயர்


இயற்றியது.

★

பதிப்பாசிரியர்:

**க. சி. குலரத்தினம்**

★


வெளியிடுவோர்:

சிவநெறிப்புரவலர், சிவதர்மவள்ளல்

**க. கனகராசா J. P. அவர்கள்**

(மில்க்வைற் தொழிலதிபர்)

யாழ்ப்பாணம்.

1984

# பதிப்புரை

மகான் காசிவாசி செந்திநாதையர் அவர்கள் தமிழ், வடமொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிப் புலமை பெற்றவர். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் வழியில் செந்தமிழும் சிவ நெறியும் வளர்த்தவர். காசியில் பத்தாண்டுகள் வாழ்ந்து வடமொழி நூல்கள் பலவற்றை ஆராய்ந்தவர். திருப்பரங் குன்றத்திலே நீண்டகாலம் வாழ்ந்து செயற்கரிய பணிசெய்து, சிவாசாரியர் பலரை உருவாக்கியவர். ஒருசமயம் ஏழு பெரிய வர்களுக்கு முறையாகப் பாடஞ் சொல்லி அவர்களைச் சப்த ரிஷிகள் எனப் புகழ்ந்தவர்; திருமுறைகளில் நல்ல பயிற்சி யுடையவராய்ப் பண்ணோடு பாடுவதற்குச் சாரங்கி வாத்திய மும் பயின்றவர். கந்தபுராணத்தை நன்கு கற்று அதன் உட்பொருளை வெண்ணை எனத் திரட்டிக் கந்தபுராண நவ நீதம் என வெளியிட்டவர். சித்தாந்த நூல்களைத் துருவி ஆராய்ந்து பல நூல்களை வெளியிட்டவர்: வேதவியாசர் செய்த பிரம்ம சூத்திரத்துக்கு வடமொழியில் நீலகண்ட சிவா சாரியர் சிவபரத்துவமாகத் தந்த பேருரையைத் தமிழில் பெயர்த்துத் தந்தவர். இது பெரிய சாதனையெனப் பெரி யோர் போற்றுவர்.

இனி அவர் செய்த நாற்பத்தைந்து நூல்களுள் மிகவும் சிறியது ஞானரத்நாவளி. இது சைவசமயத்தை இரத்தினச் சுருக்கமாக விளக்குவது. இதனை அவர் சென்னை ஞானப் பிரகாச அச்சகத்தில் 1892ஆம் ஆண்டில் வெளியிட்டிருந்தார். அதன்பின் சைவப்பெரியார் திருமயிலை சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளை அவர்கள் இரண்டாம் பதிப்பாக 1947ஆம் ஆண்டு தைப்பூச நாளில் வெளியிட்டார்கள்.

இந்நூல் கிடைத்தற்கரிய செல்வமாக இருந்தகாலத்தில், இதனை எவ்வாறேனும் தேடியெடுத்து வெளியிட வேண்டும்

என மில்லைவைற் தொழிலதிபர் ஆர்வங் கொண்டிருந்த வேளையில், திருவருள் வசத்தால், ஈழத்துச் சிதம்பரம் என்னும் காரைநகர்ச் சிவன்கோயிலைச் சேர்ந்த தக்க பண்டிதரும், சிவநெறிச் செல்வருமாய சிவத்திரு. க. வைத்தீஸ்வரக் குருக்கள் அவர்கள் வீடு தேடி வலியவந்து கொடுத்தமை கடவுட் கொடையேயன்றி வேறெதுவுமில்லை. தாமே தருபவரை எனத்திருவருட்பயன் புகழும் சிவபெருமானின் திருவருள் இருந்தவாறு.

க. சி. குலரத்தினம்

கந்தமடம்,
யாழ்ப்பாணம்.
15-1-84.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# ஞான ரத்நாவளி



## 1. விநாயகர் ஓங்கார வடிவினர்

ஓங்கார வடிவானவுன் பாததாமரையும்
உபயபரிபுர மறைகளும்...

— துண்டி விநாயகர் திருவருட்பா

ஓங்காரத் தனியுருவே போற்றி...

— விநாயகர் போற்றித் திருவகவல்

பிரணவப் பொருளாம் பெருந்தகை யைங்கரன்
சரணவற் புதமலர் தலைக்கணி வோமே...

— நறுந்தொகை



## 2. சிவனும் உமையும் பிதா மாதா

கடவுளுடைய அன்பும் இரக்கமும் அருளென்றும் சத்தி யென்றும் சொல்லப்படும். ஆதலால் கடவுளை நமது பரம பிதா என்றும் அவருடைய அருட்சக்தியைப் பரம மாதா என்றும் சொல்லுகிறோம். நாம் ஒருவரிடத்திலே எவ்வளவு பற்றோடிருந்தாலும் அவருக்கு ஒரு நன்மையைச் செய்யும் போதுதான் அந்தப் பற்று வெளியாகின்றது. அதுபோலக் கடவுள் உலகங்களைப் படைத்து ஆன்மாக்கள் வாழ்வதற்கு வேண்டிய சரீரம் முதலியவற்றைக் கொடுத்தருளும்போது தான் அவருடைய சக்தி வெளியாகின்றது. இப்படி அருட் சக்தி வெளியாதல் அவர் அருட்சத்தியோடு சேர்தலாகச் சொல்லப்படும். இது திருக்கலியாணம் என்றும் கூறப்படும்.

ஈசனரு ளிச்சையறி வியற்ற லின்ப
மிலையமொடு போகமதி காரமாகித்
தேசருவ மருவுருவ முருவுமாகித்
தேவியு மாய்த் தேசமொடு செல்வமாகிப்
பேசரிய வுயிரையெலாம் பெற்று நோக்கிப்
பெரும்போக மவையளித்துப் பிறப்பினையு மொழித்திட்
டாசகலு மடியருளத் தப்பனுட னிருக்கு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

அறுவகைச் சமயத் தோர்க்கு
மவ்வவர் பொருளாய் வேறுங்
குறியது வுடைத்தாய் வேதா
கமங்களின் குறியி றந்தங்

கறிவினி லருளான் மன்னி
யம்மையோ டப்பனுகிச்
செறிவொழி யாதுநின்ற
சிவனடி சென்னி வைப்பாம்

— சிவஞானசித்தியார்



## 3. நடராசா

சிவத்தியானத்திற்கு நடராச வடிவம் மிகவும் பொருத்த மானது. அவ்வுருவத்திலடங்கிய ஒவ்வொரு பாகமும் அரிய உண்மைகளை விளக்கி நம்மை நல்வழியிற் செலுத்தத்தக்கது. ஒரு திருக்கரத்திலேயுள்ள உடுக்கையானது, படைத்தற் றொழிலைக் குறிக்கின்றது. கடவுள் நம்மைப் படைத்து நாம் மெய்ப்பொருளாகிய அவரையடைந்து பேரானந்தத்தைப் பெறுதற்காக என்பதை அது காட்டத்தக்கது. மற்றொரு திருக்கரம் அபயமளிக்கின்றது. அதாவது, நாம் உங்களைக் காப்போம். நீங்கள் பயப்பட வேண்டாம் என்னும் குறிப்பை யுடையது; வேறொரு திருக்கரத்திலே நெருப்பு இருக்கிறது. அது அழித்தலைக் குறிக்கின்றது; நான்காவது திருக்கரம் குஞ்சித பாதத்தைக் காட்டுகின்றது. திருவடிகளுள் ஊன்றிய பாதம் முயலகனை மிதித்து ஆணவத்தை நசித்தலைக் குறிக் கின்றது. தூக்கிய திருவடி அவர் நம்மைத் தம்மோடு சேர்த் துத் தம்மைப்போல் ஆக்குவார் என்னும் அருளலைக் காட்டு கின்றது;

தோற்றந் துடிய தனிற் றேயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம் — ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதி ரோதமுத்தி
நான்ற மலர்ப் பதத்தே நாடு.

— உண்மை விளக்கம்

பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பி னுனில வளாகமும்
ஏனைப் புவனமு மெண்ணீங் குயிரும்
தானே வகுத்ததுன் தமருகக் கரமே
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையுங் காப்பதுன் னமைத்தபொற் கரமே
தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவ தாரழல் வைத்ததோர் கரமே
ஈட்டிய வினைப்பய னெவற்றையு மறைத்துநின்
றூட்டுவ தாகுநின் னூன்றிய பதமே
அடுத்தவின் னுயிர்கட் களவில்பே ரின்பம்
கொடுப்பது முதல்வநின் குஞ்சித பதமே
இத்தொழி லைந்துநின் மெய்த் தொழில்

— சிதம்பர மும்மணிக்கோவை

## 4. சிவனுடைய அங்க பிரதியங்கம் சாங்க உபாங்க மனைத்தும் அருள்வடிவே

உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றோன்றுங்
கருமமு மருள ரன்றன் கரசர ணாதிசாங்கந்
தரும்அரு ளுபாங்க மெல்லாந் தானரு ளனக்கொன் றின்றி
அருளுரு வுயிருக் கென்றே யாக்குவ னமலன் றானே.

— சிவஞானசித்தியார்

### அங்கமாவன

சிரசும், முகமும், இருதயமுமாம்.

### பிரதியங்கமாவன

மார்பும், கண்டமும், ஸ்தனங்களும், தோள்களும், நாபியும், உதரமும், குஹ்யமும், கண்களும், நாசியும், காதும்,

கைகளும், பாதங்களும், விரல்களும், துடைகளும், முழந் தான்களும், கணைக்கால்களுமாம்.

### சங்கமாவன

ஆரிண்யாதி குணத்திரயம் - திரிசூலம், சத்தியம், பரசு; பிரதாபம் - கட்கம், துர்ப்பேத்தியம், வச்சிரம், அநுக்கிர கம் - அபயமுத்திரை; ருத்தியாதி சுத்தமாயை - நாகம், அதோமாயை - பாசம், விவர்ணம் - அங்குசம், சுத்தநாதம்- கண்டை, பாசசங்காரம் - அக்நி.

### உபாங்கமாவன

வஸ்திரம், உபவீதம், மாலை, கந்தம், ஆசனம், ஆபர ணம், ஆவரணம் என்னும் இவ்வேழுமாம்.

### 5. சிவனுடைய சந்திரன், ஏறூர்தல்,
### அவன், அவள், அது நிலை
### முக்கண், மான், சூலம், அட்டமூர்த்தம்

எல்லாம் அறிபவர் (சருவஞ்ஞர்) என்பதும் தூமதிதி யைச் (சந்திரன்) சூடினமையாலும், எப்பொருட்கும் இறைவ னென்பது தருமவடிவினதாகிய ஏறூர்தலினாலும், அவர் எவர்க்கும் எவற்றிற்கும் பொது நிலையரென்பது ''அது அவள் அவன்'' என நின்றமையானும், அவரிடத்திலே மூத்தீ வேள்வியும் தொக்கவென்பது முக்கண்ணர் என்றமையாலும், வேதநாயகரென்பது வேதங்களைக் (கால்களாகக் கொண்ட) மான்மறி உடைமையானும், அவர் பிரம விஷ்ணு ருத்திர ரென்னும் மூவராய் நின்றமை ஒருதாட் சூலம் ஏந்துதலி னாலும், அவர் உலகத் துண்மையினரென்பது (பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும்) அட்டமூர்த்தத்தினாலும், அவருடைய பிறவடிவும் வண்ணமும் அவர் பெருமையையே உணர்த்துமெனவும் அறியப்படும்.

தூமதி சடைமிசைச் சூடுத தூநெறி
யாமதி யானென வமைத்த வாறே
அறனுரு வாகிய வானே றூர்தல்
இறையவ னியானென வியற்றுமாறே
அதுஅவள் அவனென நின்றமை யார்க்கும்
பொது நிலை யானென வுணர்த்திய பொருளே
மூக்கண னென்பது முத்தீ வேள்வியிற்
றுருக்க தென்னிடை யென்பதோர் சுருக்கே
வேத மான்மறி யேந்துதன் மற்றதன்
நாதனு னென்ன நவிற்று மாறே
மூவிலை யொருதாட் சூல மேந்துதன்
மூவரும் யானென மொழிந்த வாறே
எண்வகை மூர்த்தி யென்பதிவ் வுலகினில்
உண்மை யானென வுணர்த்திய வாறே
நிலநீர் தீவளி யனன்வா னென்று
மூலவாத் தொல்புக ழுடையோ யென்றும்
பொருளுநற் யூதப் படையோய் என்றுந்
தெருளநின் றுலகினிற் றெருருட்டு மாறே
ஈங்கிவை முதலா வண்ணமும் வடிவும்
ஓங்குநின் பெருமை யுணர்த்தவு முணராத்
தற்கொலி மாந்தர் தம்மிடைப் பிறந்த
சொற்பொருள் வண்மையிற் சுழலு மாந்தர்க்
காதியாகிய வறுதொழி லாளர்;

— பதினொராந் திருமுறை

6. திருவாசி

ஓங்காரமே திருவாசி.

ஓங்கார மேநற் றிருவாசி யுற்றதனில்
நீங்கா வெழுத்தே நிறை சுடராம் — ஆங்காரம்
அற்று ரறிவரணி யம்பலத்தா னுடலிது
பெற்றுர் பிறப்பற்றுர் பின்.

— உண்மை விளக்கம்

7. இடபம்

சிவனேறும் இடபம் ஞானமயம்.

சொன் மறைத்தொகை யாகம முதலிய துதிப்பப்
பொன்மை பெற்றதன் கோநகர் நீங்கியே பொற்ருள்
வன்மை பெற்றகுண் டோதரன் மொய்ம்பிடைவைத்துச்
சின்ம யத்தனி மால்விடை யேறினன் சிவனே.

— கந்தபுராணம்

8. பூணூல் சிகை

பூணூல் வேதாந்தத்தையும், சிகை ஞானத்தையும் குறிக்கும்.

நூலுஞ் சிகையு நுதலிற் பிரமமோ
நூலது நாற்பாச நுண்சிகை கோசமாம்
நூலது வேதாந்த நுண்சிகை ஞானமாம்
நூலுடை அந்தணர் காணு நுவலிலே.

— திருமந்திரம்

9. முடி

முடி அத்துவிதத்தைக் குறிக்கும்.

அத்வைத கிரந்தி

— பாசுபதப்பிரமோபநிடதம்

10. கந்தசுவாமி



ஓங்காரத்துள்ளொளிக்குள்ளே முருகன் உருவங் காணப்படும்.

ஓங்கார மூலப் பொருளாயுயிர் தோறுமென்று
நீங்கா தமருங் குமரேசனை.
ஓமெனப் படுங்குடிலையே ஒப்பிலா முருகன்
மாமுகத்து ளொன்றும்.

— கந்தபுராணம்

ஆங்காரமு மடங்கா ரொடுங்கார் பர மானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மறார் தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென் செய்வாரியம தூதருக்கே.

— கந்தரலங்காரம்

## 11. கந்தசுவாமியின் ஆறுமுகம்



சிவபெருமானுக்குரிய சருவஞ்ஞதை, திருப்தி, அநாதி போதம், அலுப்த சத்தி, அநந்த சத்தி, சுவதந்திரத்துவம் என்னும் சுத்த சாட்குணங்களும் கந்தசுவாமியுடைய ஆறு முகங்கள் என்பர்.

சருவஞ்ஞதை - முற்றறிவு
திருப்தி - வரம்பிலின்பமுடைமை
அநாதிபோதம் - இயல்பாகவே பாசங்களினீங்குதல்
அலுப்த சத்தி - பேரருளுடைமை
அநந்த சத்தி - முடிவிலாற்றலுடைமை
சுவதந்திரத்துவம் - தன்வயமுடைமை

## 12. வேலாயுதம்



ஆன்மாக்களுக்கு முத்தியின்பங் கொடுக்க விரும்பும் விருப்பம் இச்சாசத்தியும், அதற்கு வேண்டுமிவைகளை அறியும் அறிவெனப்படும் ஞானசத்தியும், அறிந்தவைகளைச் செய்யும் செயலெனப்படும் கிரியாசத்தியுமாகிய மூன்று சத்திகளின் அடுக்கு வேலாயுதமாம் என்க;

இச்சா ஞானக் கிரியை யெனு
    மிவைமுன் றிலையாய்க் கிளைத் தெழுந்திட்
டச்சா ணுழியறச் சுவற்றும்
    அயில்வே லொருகை வலமமைத்து:

— திருத்தணிகைப் புராணம்

## 13. தெய்வயானையம்மை, வள்ளியம்மை

தெய்வயானையம்மை, வள்ளியம்மை என்னும் இருவரும் முறையே சுப்பிரமணிய சுவாமியினுடைய ஞானசத்தியும் கிரியாசத்தியுமாவர்.

நல்லகங் குடைந்த செவ்வேற் கந்தனேர் தருவதாகி
வல்லியர் கிரியை ஞான வல்லியின் கிளையாய்ச் சூழப்
பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பவநெறி காய்த்திட் டன்பர்
எல்லவர் தமக்கு முத்தி யிருங்கனி உதவு மென்றும்.

— கந்தபுராணம்

## 14. ஞான பூசை

ஆன்மா சிவனுடைய பரமசிவ பூரண ஞானப்பிரகாசத்தில் அழுந்துவது ஆவாகனம். அதில் நிலைபெறுதல் தாபனம். ஆன்ம அறிவு சிவபூரணத்திலும், சிவபூரணத்துவம் ஆன்ம அறிவிலும் ஒன்றையொன்று பிரியாதிருத்தல் சந்நிதானம். ஆன்ம அறிவு என்றும் ஒழிவின்றி சிவத்திலே சமைந்து போதல் சந்நிரோதனம். ஆன்ம சுத்தியின் பொருட்டுக் கொடுக்கப்படுவது பாத்தியாச மனர்க்கியம். மோட்ச இன்பத்தின் பொருட்டுக் கொடுக்கப்படுவது புஷ்பம். நிர்மல சத்தியின் பொருட்டுச் செய்யப்படுவது மஹாபிஷேகம். அறியாமையை ஒழித்து, அறிவைப் பெறும் பொருட்டுக் கொடுக்கப்படுவது தூபதீபம். சிவானுபூதியின் பொருட்டுக் கொடுக்கப்படுவது நைவேத்தியம். சிவவியாபகம் ஆன்மாவில் விளங்குதலின் பொருட்டுச் செய்யப்படுவது பிரதட்சிணம். ஆன்மா சிவத்தோடு அத்துவிதமாதல் நமஸ்காரம்.

இப்படித் தரைமுதற் சமனை யீறுய்ச்
செப்பிவியா பிக்கும் பரம சிவனது
பொருவி லுயர்பரி பூரணந் தன்னை
அறிவிலழுந்துத லாவா கனமே
அலையா தழுந்த நிலைபெறல் தாபனம்
இவன்தன தறிவு சிவன்பூ ரணத்திலுஞ்
சிவன் பூரணத்துவம் இவன்தன தறிவிலும்
ஒன்றை யொன்றகலா துறவு செய்திருப்ப
தோன்றிய சந்நி தானமென் றுரைப்பர்
இவனிடத் துறுமறி
வென்று மொழிவறச்
சமைவது தானே சந்திரோ தனமே
பாத்தி யாசம னர்க்கியம் பழுதக
லான்ம சுத்தி நிமித்த மாகவும்,
நறுமலரதனை நல் வீட்டின்பம்
குறுகுத லேது வாகவுங் கொடுத்து
நிகழ்வுட னேதிரு மஞ்சனம் பண்ணி,
ஞானவிளக்க நண்ணுதற் பொருட்டுத்

தூப தீபந் துதைந்தினி தளித்து
பின்மன மமைவு பிறத்தற் பொருட்டு,
நைவேத் தியமுக வாசமு நல்கி,
அயன்மா லிவர்கி மூாகையின் பொருட்டுச்
செயமாண் புறவெதிர் தண்டம் பண்ணி.

— சதாசிவரூபம்

ஆவாஹநம் சாத்மநி சித்ப்ரகாசே
தத்ரஸ்திதி: ஸ்தாபந மீச்வரஸ்ய
ஸாந்நித்ய மாத்மேச்ய ரஸந்நிதாநம்
நிரோதநம் ஸ்வஸ்ய சிவே நிரோத:

மாயாத்வயஸ்ய களநம் பாத்யாசம நாதிகம்,
கர்மத்ரயவிநாச: ஸ்யாதர்க்யமஜ் ஞானமோசநம்,
மஹாபிஷேகம் நைர்மலயம் வஸ்துசுத்த நிராவ்ருதி
அஜ்ஞாந வாஸநாநா சோதுபோ தீப: ஸ்வயம்ப்ரபா,
சிவாநுபூதிர் நைவேத்யம் பாநீயம்ச ஸுவாஹிதம்
கஷாய களநம் ஜாதம் தாம்பூலம் முகவாஸநம்
ப்ரத க்ஷிணம்ச ஸர்வத்ர வ்யாபநம் ஸஹசம்புநா
ஸரித்ஸமுத்ரஸம் யோகாஜ்ஜலம் ஸமரஸம்யதா
ததா சாத்மஸ்வயோர் யோகாந்நமஸ்கார ப்ரகீர்த்யதே.

— பூஜாஸ்தவம்

மானச சுத்தியே நல்ல புஷ்பம். பொறுமையே பாத்தியாசமனுர்க்கியம். நிச்சயமாக நிலைபெற்றிருக்கும் குங்கும சந்தனுதியாம். மானச (தூப) பாத்திரத்திலே பிராண வாயுவே அக்கினி. அகங்காரமே பரமதூபம் சர்வப் பிரமாண மாகிய சிற்சத்தியே தீபம். பார்த்திவோபசாரம் நைவேத்தியம். ஆப்பியோபசாரம் பானீயம். தைஜஸோபசாரம் கண்ணுடி. வாயவீயோபசாரம் விசிறி, வைஹாயயோபசாரம் ஸ்தோத்திரம்.

ஹ்ருத்பத்மே மநஸாவிபாவித மஹாமாயோ பரிஸ்தாஸநே
த்யேயோ தீபசிகாக்ரு திஸ்ஸுகுஸுமம் பாவக்ஷ் மார்க்யம்
ஜலம்
லேபோ திரவஸாயிநீ பரசிவே ப்ராணோ நலோ மாநஸே

பாத்ரே ஹங்க்ருதிரேஷ ஏவ பரமோ தூபோ தமோநா த்மக:
தீபஸ்ஸத் விஷயா ஸாத்ருப்திகரணு கந்தர்தய க்ஷமாதிகா:
பாநீயா திகதர்ப்பணவ்யஜநக ஸ்தோத்திராதிகா வேதநம்,
நைவேத்யம் ஸ்வய முத்யதா ஸமந யாஸாக்ஷமாங்க
ஹீநோயத
யுத்த ஸ்ய ஸ்வயமேவ நாதமநுநா ஜாப; ஸநாப்யுத்தித;

— ஸித்தாந்தஸாராவளி

## 15. பக்தி புஷ்பம்

சித்தந் தெளிவீர்கா
ளத்த ஞரூரைப்
பத்தி மலர்தூவ
முத்தி யாகுமே.

— தேவாரம்

கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பன அஷ்டபுஷ்பமாம்,

— சிவஞானபோதவுரை

## 16. விரதம்

கொல்லா விரதமே விரதம்
கொல்லா விரதம் குவலய மெல்லா மோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவ தென்னிச்சை பராபரமே.

— தாயுமானவர்

## 17. ஞானம் விளக்கு

ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன வஞ்செ ழுத்துமே.

— தேவாரம்

## 18. கும்பலக்ஷணம்

கும்பத்திலே போர்த்த வஸ்திரம் தோலாகவும், கும்பத்திலே சிவப்பேறப் பூசிய மண் இரத்தமாகவும், குடத்து

மண் மாமிசமாகவும், கும்பத்தில் நிறைந்த சலம் மேதஸா கவும், தர்ப்பையினுற் செய்த கூர்ச்சமானது எலும்பாகவும், நாலுபக்கத்தும் சுற்றப்பட்டநூல் நரம்பாகவும், கும்பத்தில் போடப்பட்ட நவரத்தின சுவர்ன புஷ்பமானது சுக்கில மாகவும், நியசிக்கப்பட்ட மந்திரம் உயிராகவும், கீழே இடப்பட்ட நெல், அரிசி, எள், பயறு, உளுந்து, துவரை, கோதுமை என்னும் எழுவகைத் தானியமும் ஆசனமாகவும் சொல்லப்படும்.

வஸ்த்ரம் சர்ம விலிப்தம்ருச்ச ருதிரம்
மாம்சம் கடேம் ருத்திகா
மெதஸ் தோயம தாஸ்தி கூர்ச்சமபித:
ஸம்வீத ஸுத்ரம் ஸிரா
சுக்லம் மத்ய கரதந ஹேம குஸுமம்
க்யஸ்தோ மநுர் ஜீவிதம்
தாக்யம் ஸப்தக மாஸநம் மகவிதௌ
சம்போரிதம் பூஜநம்.

— சித்தாந்த ஸாராவளி

## 19. முப்புரம்

முப்புரமென்பது ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மல காரியமாமென்க.

அப்பணி செஞ்சடையாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கள் மூடர்கள்
முப்புரமாவது மும்மல காரியம்
அப்புரமெய்தமை யாரறிவாரே.

— திருமந்திரம்

## 20. விபூதி

பாசத்தை ஒழிப்பது விபூதி

தேசமலி பொதுஞானச் செவ்வொளியுந் திகழ்பதியாம்
ஈசனது நடத்தொழிலு மிலங்குபல வுயிர்த் தொகையும்
பாசமுமங் கதுகழியப் பண்ணுதிரு வெண்ணீறும்
ஆசில்திரு வெழுத்தஞ்சும் அநாதியிவை யாருக.

— கோயிற்புராணம்

உள்மாசு கழுவுவது நீறென்றே
உபநிடதம் உரைப்பக் கேட்டும்?

— திருவிளையாடற் புராணம்

## 21. மஹோற்சவம்

மகோற்சவ நாள் பத்தினுள் முதல் நாள் விழா தூல நீக்குதற் பொருட்டும், இரண்டாம் நாள் விழா தூலசூக்கும நீக்குதற்பொருட்டும், மூன்றுநாள் விழா மூவினையும், முப் புத்தியும், முக்குணமும், மும்மனமும், முக்குற்றமும், முப் பிறப்பும், முப்பற்றும் நீக்குதற் பொருட்டும், நாலாம் நாள் விழா நாற்கரணமும், நால்வகைத் தோற்றமும் நீக்குதற் பொருட்டும், ஐந்தாநாள் விழா ஐம்பொறியும், ஐந்தவத்தை யும், ஐந்து மலமும் நீக்குதற்பொருட்டும், ஆறுநாள் விழா காமாதியாறும், கலையாதியாறும், வினைக்குணமாறும், பத முத்தியாறும் நீக்குதற் பொருட்டும், ஏழாம் நாள் விழா எழுவகைப் பிறப்பும், கலாதிகள் ஏழும், மாயாமலம் ஏழும் நீக்குதற்பொருட்டும், எட்டாம் நாள் விழா எண்குணம் விளக்குதற் பொருட்டும், ஒன்பதாம் நாள் விழா மூன்றுரு வும், முத்தொழிலும், மூன்றிடத்துறைதலும் இலையெனற் பொருட்டும், பத்தாம்நாள் விழா பராநந்தமாக் கடலில் அழுந்துதற்பொருட்டும் செய்யப்படும்.

— சைவசமய நெறியுரை

## 22. கொடிமரம்

திருவிழாக்காலத்திலே கோயிலின் கொடிமரத்திலே சீலை சுற்றியிருப்பதைக் காணலாம். அச்சீலையிலே இடபமாகிய பசு எழுதப்பட்டிருக்கிறது. சீலையோடு தர்ப்பைக் கயிறும் சேர்க்கப்பட்டிருக்கின்றது. கொடிமரம் சிவம் என்றும், இடபம் எழுதப்பட்ட சீலை ஆன்மா என்றும், தர்ப்பைக் கயிறு பாசம் என்றும் சிவாகமம் கூறுகின்றது:

பதி: ஸ்தம்ப இதி ப்ரோக்த,
பசு ராத்மா இதி ஸ்ம்ருத
ரஜஜு பாச இதி ப்ரோக்த
ஸ்த்றிவி தாஸ்தே ஸ்மரந்சதி

*Srikanthaluxumy. A*
*11/21, Inuvil West*
*Chunnakam*



கடவுளிடத்தே ஆன்மா தங்கியிருப்பதுபோலக் கொடி மரத்திலே சீலை தங்கியிருக்கின்றது. கொடிமரமும் சீலையும் இரு வேறு பொருள்களாயினும் அவற்றைப் பார்ப்பவர்கள் கொடிமரமாகிய ஒரே பொருளாக மதிக்கின்றனர். சிவமும் ஆன்மாவும் அத்துவித சம்பந்தமுடையவை என்பதை இது விளக்குகின்றது. கயிறு சீலையைக் கட்டியிருப்பது போலப் பாசம் ஆன்மாவைச் சுற்றிக்கொண்டிருக்கின்றது. முப் பொருட் சம்பந்தங்களைக் கொடிமரம் நன்கு காட்டுகின்றது.

## 23. கைலாசம்

இருதய கமலம் இரவிவிம்பம் முதலிய எவ்விடங்களிலே சிவபெருமான் உபாசிக்கப்படினும், அவ்வவ்விட மனைத்தும் அவருக்குச் சோதிமயபரமாகாசமாகிய பரசிவலோகம் எனப் படும் கைலாசமாகும். கைலாசம் நிரதிசய ஆனந்தத்துக்கு உறையுள்.

## 24. தசசம்ஸ்காரம்

புதல்வனுடைய (சீவனுடைய) ஆவியை வாங்கி மூலா தார அருட்சத்தி தேகத்திலே பொருந்த அமைத்தல் இருது சங்கம். மலத்தினின்று பிரிந்து சிவனுக்குப் புதல்வனுதல் கருப்பாதானம். திருவருட் குணங்கள் விளங்கப்பெறுதல் பும்ஸவனம், அருவமாகிய மாயையை ஆன்மா அறியும் விவேகம் சீமந்தோன்னயனம், சிவமுதற் பொருளையெல்லாம் மருவி உட்கோடல் சனனம், மும்மலமகன்று தன்னுள்ளே சிவத்துவந்தோன்றல் நாமகரணம்; பேராநந்தம் புசித்துப் பிரியாதிருத்தல் அன்னப்பிராசனம், சிவமே மேலாய்த் தோன்றுதல் சௌளம், அளவிலாப் பாசசாலங்களை அகற்றும் மெய்ஞ்ஞான நூலோடு பழகுதல் உபநயனம், இந்திரிய விஷய அறிவைத் தூர்த்தல் விரதாதேசமாகும்.

★

அன்பார்ந்த ஆதரவாளர்களே !

இந்த நூலைப்போல இன்னும் பல நூல்கள் எங்கள் தொழிலக வெளியீடாக மலர்ந்துள்ளன. இந்தமுறையில் வந்த அறிவுநூல்கள் யாவும், மாதந்தோறும் வெளிவரும் மில்க்வைற் செய்தி என்னும் சஞ்சிகையும், மில்க்வைற் தயாரிப்புகளின் மேலுறைகளுக்கே விநியோகமாகின்றன.

மில்க்வைற் மேலுறைகளைச் சேகரித்து அனுப்புங்கள். தரமான நூல்கள் அனுப்புவோம். குறைந்தது பத்து மேலுறைகளுக்கு நூல்கள், செய்தி அனுப்பலாம்.

மேலதிக உறைகளுக்கு துவாய், கட்டில் விரிப்பு, காந்தியின் சிலை, அப்பியாசக்கொப்பி, பொலித்தீன் பாக் முதலியனவும் விநியோகஞ் செய்கிறோம்.

**மில்க்வைற் தொழிலகம்**
தபால்பெட்டி 77,
யாழ்ப்பாணம்.

சாந்தி அச்சகம், யாழ்ப்பாணம். போன்: 23002